REGD. NO. M. 6511 ★ தனி இதழ் 0—1—0 (7 காசுகள்) ★ இலங்கையில் 10 சதம் ★ PHONE: 55630

# நம் நாடு

தி.மு.க. தின இதழ் — ஆசிரியர் இரா. நெடுஞ்செழியன்

The "Nam Nadu" A Tamil Daily. ★ The Official Organ Of The D.P.F.

'நம் நாடு'
புதிய சந்தா விகிதம்
★

| | | | |
|---|---|---|---|
| மூன்று மாதம் | ... | ... | ரூ. 6 |
| ஆறு மாதம் | ... | ... | ரூ. 12 |
| ஒரு வருடம் | ... | ... | ரூ. 24 |

தனி இதழ் 7 காசுகள்
இலங்கையில் 10 சதம்

மலர் 4] சென்னை: சித்திரை 4உ செவ்வாய் (16—4—57) ★ ★ வெளியூர்: சித்திரை 5உ புதன் (17—4—57) [இதழ் 264

# கலைஞர்களுக்குத் தாய்நாட்டுப் பற்று ஏன் ஏற்படக் கூடாது?

## உள்ள உணர்வை வெளிப்படுத்துவது நாட்டுத்துரோகம்என்பதுநேர்மையா?

## மக்களின் மொழி உணர்ச்சியை அடக்க ஆதிக்கக்காரர்கள் முயற்சிப்பதற்குக் காரணம் என்ன?

## நாட்டுப்பற்றைமறந்து வயிற்றுப்பற்றை மட்டும் கவனிக்கச் செய்யவா இந்தச் சூழ்ச்சி?

## வெள்ளையன் கையாண்ட முறைக்கும் இன்றைய ஆட்சியாளர் திட்டத்திற்கும் வேறுபாடுகள் காணோம்?

### புரட்சி நடிகர் எம். ஜி. இராமச்சந்திரன் இலட்சிய முழக்கம்

"கலைஞர்களுக்கு நாட்டுப்பற்று கூடாது என்கிறார்கள்; கலைஞர்கள் ஏன், நாட்டுப்பற்றை — நாட்டுப்பற்றுக்கொண்டவர்களை ஆதரிக்கக்கூடாது? கலைஞர்கள் மட்டும் யார்? கலைஞர்களுக்கு நாட்டுப்பற்று கூடாதென்பவர்கள்இதனை நன்ருகச் சிந்தித்துப் பார்க்கவேண்டும்.

"உழைப்பாளர்கள் — விவசாயிகள் — நெசவாளர்கள் — தொழிலாளர்கள்—பொதுமக்கள்—தாய்மார்கள் ஆகிய எல்லோரும் கலைஞர்களுக்கு ஆதரவளிக்கிருர்கள்; எங்களை ஆதரிக்கிற மக்களை நாங்கள் எப்படி ஆதரிப்பது? மக்களுக்கு பிரதிஉபகாரமாக எங்கள் நன்றியை எப்படிச் செலுத்துவது?

"பல இலட்சக்கணக்கான மக்களைக்கொண்டதுதானே நாடு? பல இலட்சக்கணக்கான மக்களைக்கொண்ட நாட்டில் இருப்பவர்கள்தானே கலைஞர்கள்? நாட்டில் வாழும் மக்களுக்கு நாட்டுப்பற்று வேண்டும் என்பது ஒப்புக்கொள்ளப்படும்போது, அந்த மக்களின் கலைஞர்களாகிய எங்களுக்குத் தாய்நாட்டுப்பற்று ஏன் கூடாது?"

என்று, 13—4—57 காலை, சென்னை கோகலே மண்டபத்தில் நடைபெற்ற சிறப்புக் கூட்டத்தில் புரட்சி நடிகர் எம். ஜி. இராமச்சந்திரன் பேசுகையில் குறிப்பிட்டுவிட்டு மேலும் சொன்னர்:—

"நாட்டில் கலைத் தொழிலில் ஈடுபட்டுள்ள முதலாளிகள்—கலைஞர்கள்—பாவலர்கள் — நாவலர்கள்—நடிகர்கள் அனைவரும் மக்களின் உள்ளத்தில் பதியக்கூடியதாக—உணர்ச்சிகளைத் தூண்டக்கூடியதாக உள்ள நடிப்பு—பாட்டு—பேச்சு எல்லாவற்றையும் கலைத் துறையில் புகுத்துகிருர்கள்; மக்களுக்கு எது பயன்படுமோ அதைச் செய்கிருர்கள்.

"அதைப்போலவே திராவிட முன்னேற்றக் கழகத்திலிருக்கும் என்னைப் போன்ற கலைஞர்கள் மக்களுக்குத் தாய் நாட்டுப் பற்று வளரவேண்டும் என்ற எண்ணத்தோடு பாடுபட முன்வந்திருக்கிரேம்.

#### நமக்கு எது தாய்நாடு?

"இந்திய மக்களுக்கு நாட்டுப் பற்று வேண்டும் என்று 40—50 ஆண்டுகளாக சொல்லிவந்தார்கள்; 'வந்தேமாதரம்' என்ருர்கள்; வந்தேமாதரம் என்ருல் என்ன பொருள்? தாய் நாடு வாழ்க! என்றுதானே பொருள்? இங்கிருப்பவர்களுக்குத் தாய் நாடு எது? தமிழ் நாடு தானே—திராவிடம்தானே!

#### தெரியாதவர்கள் அல்ல!

"திராவிட நாடு பிரியவேண்டுமென்று திராவிட முன்னேற்றக் கழகம் கூறுகிறது. ஆனல், காங்கிரசார், 'இந்தியா ஒன்ருகவே இருக்கவேண்டும்; நாட்டைப்பிரிப்பது தேசத்துரோகம்' என்கிருர்கள். பாகிஸ்தான் பிரிவதற்கு முன்புகூட அப்படித்தான் சொல்லி வந்தார்கள். ஆனல் பிரியாமலா இருந்தது? 'தேசத்துரோகம்' என்று சொல்பவர்கள் நாம் திராவிட நாடு பிரியவேண்டுமென்று எதற்காககூறுகிரேம் என்பதை தெரியாதவர்களல்ல; நாம் சொல்வதைக் கண்டு சந்தேகப்படுகிருர்கள்.

#### சொன்னேம்; சொல்லுகிருர்கள்!

ஆனல் தேர்தலுக்குப் பிறகு காங்கிரஸ் சீர்திருத்தக் கமிட்டி 'வடநாட்டில் இருப்பதுபோன்று தொழிற் துறைகள் தென்னட்டில் இல்லை; எனவே, அதற்காகப்போராடப் போகிரேம்,' என கூறியிருக்கிருர்கள். இதைத் தானே திராவிட முன்னேற்றக் கழகம் சொல்லி வந்தது—புள்ளி விவரங்களோடு சொல்லி வருகிறது? நாங்கள் சொன்னல், கலைஞர்கள் — நடிகர்கள் — சினிமாக்காரர்கள் என்று கூறுகிருர்கள்.

#### கழகத்தவரா? அல்ல!

"தென்னிந்திய நடிகர் சங்கம், கலைப்பணியாற்ற மலேயா செல்லவிருக்கும் நண்பர் டி. கே. சண்முகம் குழுவினர்களுக்கு, தேநீர் விருந்தொன்று நடத்தியது. அதில் எல்லா நடிகர்களும் கலந்து கொண்டார்கள்; இவ்விழா அமைச்சர் பக்தவத்சலம் தலைமையில் நடைபெற்றது. இதில் பேசிய எல்லாக் கலைஞர்களும், 'இந்தியாவிலிருந்து வெளிநாடுகளுக்குக் கலைத் தூதுக்கோஷ்டிகளாகச் செல்பவர்களில் தென்னட்டவர்—குறிப்பாகத் தமிழ் நாட்டவர் மிகக் குறைவு; எனவே தமிழ் நாட்டிலிருந்து கலைத் தூதுக் கோஷ்டிக்குத் தேர்தெடுக்கப்படும் கலைஞர்களை தென்னிந்திய நடிகர் சங்கத்தினரை கலந்து கொண்டு தேர்ந்தெடுக்க வேண்டும்' என்று கூறினர்கள். இவர்களெல்லாம் திராவிட முன்னேற்றக்கழகத்தவரா? இல்லை! எல்லாக் கட்சியைச் சார்ந்தவர்களும் இருக்கிருர்கள். ஆனலும், தென்னட்டு மக்களுக்கு சரியான பிரதிநிதித்துவம் இல்லை என்பதை உணர்கிருர்கள்; இதுதான் இன்று நாட்டிலுள்ள நிலை!

#### மொழி வளர்ச்சி தடுக்கப்படுகிறது

"நாட்டுப்பற்றுஏற்பட மொழி வளர்ச்சி அவசியம். மொழி வளர்ச்சி யிருந்தால்தான் நாட்டுப்பற்று உருவாகிறது. மக்கள் மொழியைப் பற்றிச் சிந்திக்கும்பொழுதுதான் அவர்களிடையே எழுச்சி தோன்றுகிறது; நாட்டுப் பற்றுத் தோன்றுகிறது. நாட்டுப்பற்று தோன்றவிடாமல் செய்ய மொழியை—மொழி உணர்ச்சியை அடக்க வேண்டும் என்றுதான் ஆதிக்க எண்ணம் கொண்டவர்கள் முயற்சித்தார்கள். அதைப்போலவேதான், நாட்டுப் பற்றும் — மொழி உணர்ச்சியும் — தாய்மொழி வளர்ச்சியும் தடுக்கப்படுகிறது.

#### மொழி-உயிர் நாடு-உடல்

'ஒரு நாட்டு மக்களுக்கு தாய் மொழிப் பற்றும்—நாட்டுப் பற்றும்தான் முக்கியம்; தாய் மொழி உயிராகவும்—நாட்டுப் பற்று உடலாகவும் இணைந்து இருக்கவேண்டும்.

#### ஆங்கிலேயரைப்போல...

"இந்த நாட்டை ஆங்கிலேயர் ஆண்டபோது, 'உத்தியோகங்களுக்கு ஆங்கிலம் படித்திருக்கவேண்டும்,' என்ருர்கள்; அப்பொழுது நாட்டுப் பற்றுபோய் வயிற்றுப் பற்றைமட்டும் கவனிக்க வேண்டியிருந்த சிலர் உத்தியோகம் செய்தார்கள்.

"அதேபோல, ஆங்கிலேயர்கள் வெளியேறிய பிறகு, அதே முறையில், இந்தியை இன்றைய ஆட்சியாளர்கள் கொண்டுவருகிருர்கள்.

#### அவர்கள் எண்ணம்!

"இங்குள்ள மக்களுக்கு நாட்டுப் பற்று எழக் கூடாதென்று, மொழி உணர்ச்சியை அடக்க வேண்டுமென்ற எண்ணத்தோடு இந்தியைப் புகுத்துகிருர்கள்.

#### 'புதிய காசு' போதிய சான்று!

"இப்பொழுது 'நயா பைசா' என்ற பெயரில் புதிய காசு வந்திருக்கிறது; அதுவே போதும்—நம் மொழிப்பற்றை இல்லாமல் ஆக்க ஆட்சியாளர்கள் முயற்சி செய்கிருர்கள் என்பதற்கு!

"இதுவே சான்ருகாதா—நாம் வேறு, அவர்கள் வேறு; நம் நாடு வேறு, அவர்கள் நாடு வேறு-என்பதற்கு!

"'காசு' என்று சொல்வதை 'பைசா' என்று அழைக்கச் சொன்னல், அது, 'தாயை அம்மா என்று கூப்பிடாதே' என்று சொல்வதுபோலத் தானே ஆகிறது?

#### இந்தி வெறி......

"எப்படி எல்லாம்—எங்கெல்லாம் மொழி உணர்ச்சியை அடக்க வேண்டுமோ அங்கெல்லாம் செயலாற்றும் முறையை மேற்கொள்ளுகிருர்கள்; எங்கெல்லாம் இந்தியைப் புகுத்த வேண்டும் என்று நினைக்கிருர்களோ அங்கெல்லாம் அதைக் காரியமாக்குகிருர்கள்.

(4-ம் பக்கம் பார்க்க)

★★★★★★★★★★★★★★★★★★

## சேலம் தேர்தல் வழக்கு

★

சேலம் தேர்தல் வழக்கு மனு 15—4—57-ஆம் நாளன்று பொதுச் செயலாளர் இரா. நெடுஞ்செழியன் அவர்களால் டில்லி தேர்தல் கமிஷனரிடம் அஞ்சல் மூலம் தாக்கல் செய்யப்பட்டது.

★★★★★★★★★★★★★★★★★★

## முடி துறக்க மன்னர் தயாராம்!

### பிரதமரும், இராணுவ அதிகாரிகளும் கைது செய்யப்பட்டதாகத் தகவல்?

#### ஜோர்தானில் இராணுவப் புரட்சி தோல்வி

அம்மான், ஏப். 16—ஜோர்தான் நாட்டில் இன்று ஒரே குழப்ப நிலைமை நீடித்திருப்பதாகச் செய்திகள் மூலம் தெரிய வருகிறது.

21 வயது நிரம்பிய மன்னர் உசேன், அமெரிக்காவை ஆதரிப்பவர்; எனினும், சமீபகாலம் வரையில் பதவியிலிருந்த பிரதமர் நபுல்சி ரஷ்யாவை ஆதரிப்பவர்—அமெரிக்காவை எதிர்ப்பவர். இதனல், மன்னருக்கும் பிரதமருக்கும் தகராறு ஏற்பட்டு, இறுதியில் மன்னர் பிரதமரை 'டிஸ்மிஸ்' செய்துவிட்டார்.

இந்நிலைக்குப்பின், ஒருவர்பின் ஒருவராக இருவர் மந்திரி சபை அமைக்கும் முயற்சியில் ஈடுபட்டுப் பின்வாங்கிவிட்டனர். பின்னர், 6 நாட்களாக சர்க்கார் இல்லாதிருந்த ஜோர்தான் நாட்டுக்கு ஒருவிதமாக மந்திரி சபை ஏற்பட்டது என்ற செய்தி வெளியான அதே நேரத்தில், ஜோர்தான் இராணுவத்தின் ஒரு பகுதியினர் மன்னருக்கு எதிராக இராணுவப் புரட்சி செய்ததாகவும், புரட்சி தோல்வியுற்ற பின்பு ஜோர்தான் அரசியல் தலைவர்களும் இராணுவ அதிகாரிகளுமாக 38 பேர் கைது செய்யப்பட்டுள்ளதாகவும் தெரியவருகிறது.

கைது செய்யப்பட்டவர்களில் பிரதம சேனதிபதியும், பிரதமர் நபுல்சியும் உள்ளதாக மாறுபட்ட செய்திகள் மூலம் தெரியவருகிறது.

#### மன்னர் எச்சரிக்கை

அரசியல் நெருக்கடி விரைவில் தீரவில்லையானல் இராணுவச் சட்டம் பிரகடனமாகும் என்று மன்னர் எச்சரித்ததாகவும் கூறப்படுகிறது.

முடி துறப்பதனல் நாட்டிற்கு நன்மை ஏற்படும் என்று தனக்குத் தோன்றினல் உடனே அவ்வாறு செய்வதற்குத் தயாரெனவும் மன்னர் வாக்களித்துள்ளாராம்.

Best copy available.

நம் நாடு
தி.மு.க.தினஇதழ் ஆசிரியர் இரா.நெடுஞ்செழியன்
சென்னை 16—4—57 செவ்வாய்

# முதலமைச்சர் முறையீடு

முன்னாள் முதலமைச்சர் கனம் காமராசர் இன்னாளும் அதே முதலமைச்சராக அரியாசனம் ஏறி இருக்கிறார். அடிப்படை கருத்தளவில் சிறிதளவும் வேறுபாடு இல்லாதார் சிலரும், அவர்தம் வெளிப்படை எதிர்ப்பாளர்களாக மாறி, தேர்தலில் அவரை வீழ்த்தத் திட்டமிட்டுச் செயலாற்றினர். அவர்கள் அனைவரும் வேதனையால் வாட்டமுறும்வகையில் அவரே மீண்டும் கனமாக ஏற்றம் பெற்றிருக்கிறார்.

கனம் காமராசர் அவர்களின் தேர்தல் செயல்முறைகளையும், வரைகடந்த பணபலத்தையும், அருகுபோல் வேர்விட்டிருக்கும் சாதிப்பிடிப்பையும், அவை அனைத்தையும் தனது வெற்றிக்குச் சாதகமாகப் பயன்படுத்திக்கொள்ள அவருக்குள்ள அறத்தின் நீங்கிய நெஞ்சத்துணிவையும், நமது கழகம் தெளிவாகத் துவக்க முதலே தெரிந்துகொண்டிருந்தது. அதுவுமன்றி முதலமைச்சர் என்ற நிலையில் தமக்குள்ள அதிகாரத்தை, தமது வெற்றிக்காகத் தாம் மேற்கொள்ளும் தவறிய முறைகளுக்கு விசையூட்ட அவர் என்றும் தயங்கமாட்டார் என்றப் பேருண்மையையும் நமது கழகம் ஐயமறத் தெரிந்துகொண்டிருந்தது. தேர்தல் வெற்றியும், அதன் விளைவான முதலமைச்சர் பீடமும், அவரிடமே மீண்டும் சரணடையும் என்று, தேர்தலுக்கு முன்பிருந்தே நாம் உணர்ந்திருந்தோம். எனவே, அவர் தேர்தலில் வென்றார் என்ற செய்தியும், மறுமுறையும் முதலமைச்சர் ஆனார் என்ற விந்தையும், நமக்கு அதிர்ச்சியாகவுமில்லை—ஆச்சரியமாகவுமில்லை. நிற்க.

மறுமுறையும் முதலமைச்சராக ஏற்றம் பெற்றுள்ள கனம் காமராசர், தமக்கு இயல்பாக உள்ள குறைபாடுகள் அனைத்தையும் மறந்து, தனக்குத் தனித்த முறையில் விஸ்வாசம் கொண்டிருப்பவர்களாகப் பார்த்து, புதிய நால்வரை அமைச்சர்களாகத் தேர்ந்தெடுத்துக் கொண்டுள்ளார். தோல்வி தாக்கூடாதவர்களாகவும், அதற்குத் தேவைப்படும் தனித்தன்மை அறவே இல்லாதவர்களாகவும், பதவி பெற்றிருப்பதே பெறுதற்கரிய பெரும்பேறு என மனநிறைவு கொள்ளக்கூடியவர்களாகவும் கண்டறிந்து மற்ற அமைச்சர்களைத் தேர்ந்தெடுத்துக்கொண்டுள்ளார்.

இடம், சாதி, பால் ஆகிய மூன்றுக்கும் முக்கியத்துவம் தந்து கூட்டு அமைச்சர்களைத் தேர்ந்தெடுத்துக்கொண்டுள்ள முறை கண்டு, அமைச்சர்களாக ஆக வேண்டும் என ஆலாய்ப் பறந்து கிடந்தவர்கள் எல்லாம் பெரும் ஏமாற்றம் கொண்டிருக்கிறார்கள். அவ்வாறு ஏமாற்றம் பெற்றுள்ளவர்கள் நிலை பரிதாபத்திற்குரியதே.

தமிழகத்தை ஆளும் வாய்ப்பினை மீண்டும் பெற்றுள்ள காமராசர், தமது கட்சியுடன் ஒத்துழைக்கும்படி, இதர கட்சிகளையும் தமிழக மக்களையும் வானொலி மூலம் பொதுப்படையாகக் கேட்டுக்கொண்டுள்ளார். ஆட்சி பீடம் ஏறுவோர் எவராக இருந்தாலும், குறிப்பிடத்தகுந்த முதற்சடங்காக மேற்கொள்ளும் முறையீட்டை கனம் காமராசரும் ஆற்றியுள்ளார் என்பதைத் தவிர்த்து, அதற்குத் தனிச்சிறப்பு எதுவுமிருக்கவில்லை.

தேர்தல் வேகத்தை மறந்துவிடுங்கள்—நாட்டு மக்கள் பொதுநலனுக்காகப் பாடுபடவாருங்கள்—இதுவே நம்மனைவருக்கும் உள்ள கடமை—எனக் காமராசர் அவர்கள் முறையிட்டுக் கொண்டுள்ளார்.

வேற்றுமைகளை வற்புறுத்தாதீர்—வேறுபாடுகளை வலியுறுத்தாதீர்—வெறுப்பை வளர்க்கும் பேச்சுகளை விட்டுவிடுவீர்—எனவும் கனம் முதலமைச்சர் வேண்டிக் கொண்டுள்ளார்.

கட்சிப் பிரிவுகளைக் கருதக்கூடாது—கருத்து மாறுபாடுகளுக்கும் இடமில்லை—இவைகளுக்கு அப்பாற்பட்டது மக்கள் சேவை—என்றும் முதலமைச்சர், தமது முறையீட்டில் குறிப்பிட்டுள்ளார்.

மக்கள் சேவைகளில் தூய்மையுடன் ஈடுபடவேண்டும்—எந்த அளவுக்கு அதில் தூய்மையுடன் ஈடுபடுகிறோமோ அந்த அளவுக்கு நம்மிடை வேற்றுமை குறைந்து, தோழமை வளரும்—என்றும் கனம் காமராசர், போதனை புரிந்துள்ளார் வானொலி மூலம்.

மக்கள் சேவையாம்—அதை அனைவரும் தூய்மையுடன் செய்ய முன்வரவேண்டுமாம்—அப்பொழுதுதான் வேற்றுமைகள் வீழ்ச்சியுறுமாம்—தோழமை வளருமாம்!

மக்கள் சேவையைத் தூய்மையுடன் ஆற்ற வேண்டும். அப்பொழுதுதான் வேற்றுமை மாயவும் தோழமை வளரவுமான நன்னிலை உருவாகும் எனப் பேசும் கனம் காமராசர் இவ்வருமறையை எந்த பீடத்திலிருந்து நாட்டு மக்களுக்கு அளிக்கின்றாரோ, அந்த உயர்ந்த இடத்தில் தாம் அமருவதற்காகத் தேர்தல் காலத்தில் அதிகாரத்தை வைத்துக்கொண்டு ஆடிய திருக்கூத்தைத் தூய்மையானது — அறத்தின் வழி செயல்பட்டு இருப்பது என எவர்தான் கொள்ளுவர்?

பொதுத் தேர்தல், மக்கள் சேவையைத் தூய்மையாக மேற்கொள்ளுவதற்காக அமைந்துள்ள முதற்படி என்பதை, தேர்தல் நேரத்தில் இந்தக் கனவான் கனவிலாவது கருதி இருப்பாரா? அறத்தின் வழி நின்று இயங்கிப் பெறும் விளைவு—வெற்றிதான் தூய்மையானது—புனிதமானது என்ற காந்திய உள்ளடக்கத்தை, தேர்தல் நேரத்தில் சித்திரவதை செய்த கறைபட்ட கரத்துடன் கனமாகி இருப்பவரல்லவா இந்தக் காந்தியசீடர்?

இவர்தான் உச்சரிக்கின்றார், தூய்மை என்ற புனிதமான தமிழ்ச் சொல்லை!

தாம் முதலமைச்சராக இருந்து மேற்கொண்ட திருவிளையாடல்களை நாடு மறக்க வேண்டுமாம்—மன்னிக்கவேண்டுமாம் — ஒத்துழைப்பும் அளிக்க வேண்டுமாம்!

நாட்டு நல்லறிவாளர்கள் நகைக்கத்தான் செய்வர், அவர் வானொலி முறையீடு கேட்டு! இருந்தாலும், நாம் அவர் ஆற்றிய தீவினை கண்டு அவர்பால் பரிதாபப்படுகிறோம்!

தமது வானொலி முறையீட்டின்படி, தோழமை வளரவும், மக்கள் நல்வாழ்வு பெறவும், அவர் மனத்தூய்மையுடன் பணியாற்ற இருப்பது உண்மையாகவும், அவ்வகையில் அவர் மேற்கொள்ளக்கூடிய ஒவ்வொரு செயலையும் சீர்தூக்கிப் பார்த்து, அச்செயலால் விரும்பிய நலன் விளைவாகும் என விளக்கமாகத் தெரியுமானால், தம் இயல்புபடி நமது கழகம், உள்ளத் தூய்மையுடன் அதன் வெற்றிக்கு ஒத்துழைக்கும். ஆனால், ஆட்சியாளர் செயலால் அல்லல் நேரும் எனக் கண்டால், இடுக்கண் பலவற்றையும் ஏற்றுக்கொண்டு, அறப்போர்களத்தில் ஆட்சியினரை சந்திக்க நமது கழகம் என்றும் பின்வாங்காது என்பதையும் முதலமைச்சருக்குத் திட்டவட்டமாகத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

# ‘இலங்கையின் முன்னேற்றத்திற்கு மூலகாரணமாக விளங்கிய சமுதாயத்தை நாடற்றவர்கள் ஆக்குவதா?’

## ‘8-இலட்சம் தமிழர்களுக்குக் குடியுரிமை மறுப்பது அரசியல் நெறிக்கோ அறநெறிக்கோ ஏற்றதா?’

## ‘உழைப்புக்கும் தொண்டுக்கும் கிடைக்கும் பரிசு இதுதானா?’

‘வேலைசெய்து பிழைக்கும் வாய்ப்பின்றி நடுத்தெருவில் நிற்பது அவ்வளவு சாதாரணமான பிரச்சினையா?’

# ‘தமிழகம் பதைக்கிறது; டில்லியில் பரபரப்பு காணோம்!’

‘இலங்கை அரசாங்கத்தின் போக்கைவிட இந்திய ஆட்சியாளரின் அலட்சியமே வருத்தத்தைத் தருகிறது’

“இலங்கைத் தமிழரில் பாதிப்பேர்களின் அரசியல் உரிமையைப் பறிக்கும் சதித்திட்டம் வெற்றிக் கட்டத்தை நெருங்கிக்கொண்டிருக்கிறது; இதன் விளைவாக ஏற்படக்கூடிய அபாய நிலையைக் கற்பனை செய்து பார்த்தாலே நமக்கு அச்சமும், கவலையும் ஏற்படுகிறது.

“8 இலட்சம் தமிழர்கள் குடியுரிமையின்றி, வேலை செய்து பிழைக்கும் வாய்ப்பின்றி நடுத்தெருவில் நிற்பதென்பது அவ்வளவு சாதாரண பிரச்சினை அல்ல. இத்தகைய அபாய நிலைகண்டு தமிழகம் முழுதுமே பதைப்புறுமென்பதில் ஐயமில்லை.

“ஆனால் டில்லியிலோ பரபரப்பு எதுவும் காணப்படவில்லை. கிழ்வங்க அகதிகளின் அவதிகளையும் துன்பங்களையும் போக்குவதில் இந்திய அரசாங்கம் சுறுசுறுப்பு காட்டுகிறது; அகதிகள் புனர்வாழ்வுக்காகப் பல கோடிச் செலவில் திட்டங்கள் நிறைவேற்றப்பட்டு வருகின்றன.

“இலங்கைத் தமிழரின் அவல நிலைபற்றியோ அந்த அளவுக்கு கவலை கொண்டிருப்பதாகத் தெரியவில்லை, டில்லி ஆட்சியாளர்! மௌனம் சாதிக்கின்றனர்! இலங்கை அரசாங்கத்தின் போக்கைவிட, இந்திய ஆட்சியாளரின் அலட்சியமே நமக்கு வருத்தத்தை தருகிறது”

—என்று, ‘இலங்கைத் தமிழர் நிலை’ என்ற தலைப்பில், 11-4-57 ‘தமிழ் நாடு’ இதழ் தனது தலையங்கத்தில் குறிப்பிட்டுவிட்டு, மேலும் எழுதுவதாவது :—

“8 இலட்சம் தமிழருக்கு இலங்கைக் குடியுரிமை கிடையாது; இதன் உட்பொருள் என்ன? குடியுரிமையின்மையால் இவர்களுக்கு வாக்குரிமை வழங்கப்படாது; அதாவது, இம்மக்களுக்கு அரசியல் உரிமையே கிடையாது; பண்டாரநாயகா ஆட்சியினரின் இந்த விசித்திரப் போக்கு இந்தியா—இலங்கை நல்லுறவு வளர்ச்சியைத் தடைப்படுத்துமென்பது ஒருபுறமிருக்கட்டும்; முதலில் அந்நாட்டின் நல்வாழ்வையும் முன்னேற்றத்தையுமே இப்போக்கு குலைத்துவிடுவதாக இருக்கிறது.

பயனற்ற நிலத்தை உழைப்பால் பண்படுத்தித் தேயிலைத் தோட்டங்களும், ரப்பர் காடுகளும் பெருகச் செய்தவர்கள் தமிழர்களே; அதுமட்டுமல்ல - பொருளையும் அறிவையும் முதலீடு செய்து இலங்கையின் வாணிபத்தைச் செழிக்கச் செய்தவர்களும் இம்மக்களே!

“முன்னேற்றத்திற்கு மூலகாரணமாக விளங்கிய ஒரு பெருஞ் சமுதாயத்தை ‘நாடற்றவர்கள்’ ஆக்குவதுதானா அவர்களுடைய உழைப்புக்கும் தொண்டுக்கும் கிடைக்கும் பரிசு? வரலாற்று அடிப்படையில் நோக்கினுங்கூட சிங்கள வருக்கும் காலத்தால் முந்திய இலங்கை இனத்தவர் தமிழரேயாவர்; இது வரலாறு கூறும் உண்மை.

“இலங்கைத் தமிழினத் தொன்மைக்குப் பண்டைத் தமிழ் நகராகிய யாழ்ப்பாணம் இன்னும் நிலைத்த சான்றாயிருந்து வருகிறது. இலங்கையின் பண்டை நினைவுச் சின்னங்களும் இதே உண்மையை வலியுறுத்துகின்றன. கொழும்பிற்கு அருகே அண்மைக் காலத்தில் கிடைத்த ‘முதுமக்கள் தாழி’ ஒன்று சுமார் மூவாயிரம் ஆண்டுக்கு முற்பட்டதெனக் கருதப்படுகிறது.

“எனவே, வரலாற்றாலும், உழைப்பாலும் இலங்கையிலேயே சிறப்பிடம் பெறத்தக்க ஒரு பேரினத்தைச் சேர்ந்த 8 இலட்சம் தமிழருக்கு இயல்பான குடியுரிமை கூட அளிக்க மறுத்தல் அரசியல் நெறிக்கோ, அறநெறிக்கோ ஏற்றதாகுமா? இத்தகைய தீநெறி, இலங்கையின் நல்வாழ்வுக்கு ஏற்றதா?

“இலங்கை இந்தியர் எதிர்காலம் சம்பந்தமாக உருவான இந்திய—இலங்கை உடன்படிக்கையைக் கொத்தலவாலாவின் அரசாங்கம் ஒழுங்காகச் செயற்படுத்தத் தவறியது. அதன் பலனாக, குடியுரிமை கோரிய இலட்சக்கணக்கான தமிழர்களின் மனுக்கள்மீது அதிகாரிகள் முடிவெதுவும் செய்யாமலே காலங்கடத்தி வந்தனர். ஆனால் பண்டாரநாயகா ஆட்சியிலோ, நிருவாகத்தினர் அளவுக்கு மீறிய சுறுசுறுப்பு காட்டுகிறார்கள். எதில்? மனுக்களைத் தள்ளுபடி செய்வதில்! இலங்கை மக்களில் ஐந்தில் ஒரு பகுதியினர் தமிழர்; 16-இலட்சத்திற்கும் மேற்பட்டவர், இந்த இனமக்கள். இவர்களின் மொழிக்கு இலங்கைப் பொதுவாழ்வில் இடமில்லை; சிங்களமே இலங்கையில் ஒரே பொதுமொழியாக ஆக்கப்பட்டுவிட்டது; 16 இலட்சம் மக்கள்மீது சிங்களம் திணிக்கப்படுகிறது; அம்மொழியையே பல்கலைக் கழகப் பாடமொழியாக்குவதற்கும் முன்னேற்பாடுகள் செய்யப்படுகின்றன; பழம்பெரும் சமுதாயம் ஒன்றுக்கு மொழியுரிமை கிடையாது.

இதற்குரிய பல காரணங்களில் ஒன்று, கொழும்பில் இந்தியத் தூதராகத் தமிழர் ஒருவர் நியமிக்கப்படாமை. இந்தியாவையே ஆளும் அளவுக்கு அறிவாற்றல் மிக்க தமிழரில் தூதுவராகப் பணியாற்றத் தக்க ஒருவர் கிடைக்கவில்லையா? தமிழர் தூதுவராக நியமிக்கப்பட்டால்தான், இலங்கைத் தமிழரின் அவலநிலையின் அபாயத்தையும், அதைத் தீர்க்க வேண்டியதையும் டில்லி நன்கு உணரமுடியும்! அந்த உணர்வு இந்திய அரசாங்கத்தை விரைந்து செயலாற்றத் தூண்டும்.

“இக்காரணம் பற்றியே இலங்கை, மலேயாபோன்ற தமிழர்வாழ் நாடுகளுக்குத் தமிழரையே தூதுவராக நியமிக்க வேண்டுமென்ற கருத்து இங்கு அடிக்கடி வலியுறுத்தப்பட்டு வந்தது. ஆனால் இந்திய அரசியலாரோ, சில நாட்களுக்கு முன்பு ஒரு வடநாட்டவரையே மீண்டும் இலங்கைத் தூதுவராக நியமித்துள்ளனர்.

“ஆகவே, முதலில் இலங்கைத் தமிழர் நலனில் மத்திய அரசாங்கம் பெரும் அக்கறை காட்ட வேண்டும்; தனது செல்வாக்கு அனைத்தையும் பயன்படுத்தி இலங்கையின் போக்கை மாற்ற முயலவேண்டும். இச்செயல் மிகமிக அவசியமானது மட்டுமல்ல; அவசரமானதுமாகும்”

## வெள்ளத்தைக் கட்டுப்படுத்தும் பணியில் 5000 பேர்!

ஹாங்காங், ஏப். 15—

சீனாவிலுள்ள மஞ்சள் நதியின் வெள்ளத்தைக் கட்டுப்படுத்த உலகிலேயே மிகப் பெரிய அணைக் கட்டுத் திட்டத்தை நிர்மாணிக்கும் பிரம்மாண்டமான பணியில் 5,000 தொழிலாளர்கள் ஈடுபட்டுள்ளனராம்.

புதுடில்லி, ஏப். 15—

ஒரிசா மாநிலத்தைச் சேர்ந்த கியோஞ்ஜர்கா மாவட்டத்தில் பட்டுக்கல், இரும்புக்கனி, காவோலின் (ஒரு வகை களிமண்) ஆகிய தாதுக்களின் படிவங்கள் கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறதாம்.



# தமிழ் நாட்டு அமைச்சரவை

## எண்மரின் வாழ்க்கை வரலாறு

சென்னை, ஏப். 15—

13-4-57ல், சென்னை - கோட்டையில் கவர்னர் முன்னிலையில், காமராசரும், மற்ற ஆறு அமைச்சர்களும் உறுதிமொழி கூறி பதவியேற்றனர். ஆர். வெங்கட்டராமன் மட்டும் பின்னால் உறுதிமொழி எடுத்துக்கொள்வார்.

## அமைச்சர்கள் வாழ்க்கை வரலாறு

*

### கே. காமராசர்

54 வயதான முதலமைச்சர் கே. காமராசர் தமது வாழ்நாளில் 3,000 நாட்களை சிறைச்சாலையில் கழித்திருக்கிறார். இவர் 1940-ம் ஆண்டில் முதல் முதலாகத் தமிழ் நாடு காங்கிரசுக் குழுத் தலைவரானார். இவர் இப்பதவியை நடுவில் சில மாதங்கள் தவிர 1954-ம் ஆண்டு வரை வகித்து வந்தார். 1954-ஆம் ஆண்டில் இவர் சென்னை மாகாண முதலமைச்சரானார். 1947-ஆம் ஆண்டிலிருந்து அகில இந்தியக் காங்கிரசுக் குழுவின் கூட்டங்களில் உறுப்பினராகவோ அல்லது விசேட அழைப்பின் பேரிலோ கலந்துகொண்டிருக்கிறார்.

காமராசர் 1937-ஆம் ஆண்டில் முதல் முதலாக மாகாண சட்டசபைக்கு சாத்தூர்த் தொகுதியிலிருந்து போட்டியின்றித் தேர்ந்தெடுக்கப்பட்டார். இவர் பின்பு 1946-ம் ஆண்டிலும் சட்டசபைக்கு உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். 1951-ஆம் ஆண்டில் இவர் திருவில்லிப்புத்தூர் தொகுதியிலிருந்து பாராளுமன்ற உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். இவர் மாகாண முதலமைச்சரான பின்பு பாராளுமன்ற உறுப்பினர் பதவியிலிருந்து விலகி சென்னை சட்டசபைக்கு குடியாத்தம் தொகுதியிலிருந்து இடைத் தேர்தலில் தேர்ந்தெடுக்கப்பட்டார். புதிய சட்டசபையில் இவர் மீண்டும் சாத்தூர்த் தொகுதியின் பிரதிநிதியாக இருக்கிறார்.

காமராசர் உயர்நிலைப் பள்ளியில் படித்துக் கொண்டிருந்தபோது படிப்பை நிறுத்தினார். இவர் 1954-ம் ஆண்டில் மலேயாவிலும் இலங்கையிலும் சுற்றுப் பயணம் செய்தார். அந்நாடுகளில் உள்ள இந்தியர்களின் நிலையைக் கண்டறிவதற்காகவே இவர் அங்கு சுற்றுப்பயணம் செய்தார்.

### ஆர். வெங்கட்ராமன்

(தொழில், தொழிலாளர்)

ஆர். வெங்கட்ராமன் 1910-ம் ஆண்டில் பிறந்தவர். மாணவர்கள் சங்கத் தலைவராக இருந்திருக்கிறார். மாணவராக இருந்தபோது சொற்பொழிவாற்றுவதில் சிறந்தவராக விளங்கினார். மாகாண வழக்கறிஞர்கள் கூட்டமைப்பின் செயலாளராக இருந்திருக்கிறார். ‘ஆங்கிலேயர் வெளியேறவேண்டும்’ என்ற இயக்கம் நடைபெற்றபோது சிறைத் தண்டனை அடைந்தார்.

சப்பானியருடன் மலேயாவிலும் சிங்கப்பூரிலும் இரண்டாவது உலகப்போரின்போது ஒத்துழைத்ததாகத் தண்டிக்கப்பட்ட இந்தியர்களின் சார்பில் வாதாடுவதற்காக இந்திய அரசாங்கத்தால் அனுப்பப்பட்ட இந்திய வழக்கறிஞர்களில் இவரும் ஒருவர். இவர் தமிழ் நாடு காங்கிரசுக் குழு செயலாளராகவும், தொழிலாள நலன் பிரிவு பொறுப்பாளராகவும் இருந்திருக்கிறார். 1950-ம் ஆண்டில் இடைக்கால பாராளுமன்ற உறுப்பினராகவும் 1952-ம் ஆண்டில் தஞ்சாவூர் மாவட்டத்திலிருந்து மக்கள் சபை உறுப்பினராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டார். இவ்வாண்டுப் பொதுத் தேர்தலிலும் தஞ்சாவூர் மாவட்டத்திலிருந்து மக்கள் சபைக்கு மீண்டும் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

1950-ம் ஆண்டில் நியூஜிலாந்துக்கு காமன்வெல்த் பாராளுமன்றத் தூதுக்குழு உறுப்பினராகச் சென்றார். 1952-ம் ஆண்டில் செனிவாவில் நடைபெற்ற ஐ. நா. சர்வதேசத் தொழிலாளர் அமைப்பின் உலோகப் பொருள் குழுக் கூட்டத்திற்குத் தொழிலாளர்களின் சார்பில் சென்ற பிரதிநிதிகள் குழுவிற்கு தலைமை தாங்கினார்.

1953, 1955, 1956-ம் ஆண்டுகளில் ஐ. நா. பேரவைக் கூட்டத்திற்கு இந்தியாவின் மாற்றுப் பிரதிநிதியாகச் சென்றார். ஐ. நா. நிருவாக நடுநிலை மன்றத்தின் உறுப்பினராகவும் பணியாற்றியிருக்கிறார். உழைக்கும்பத்திரிகையாளர் ஊதியக் குழுவின் உறுப்பினருமாவார். தொழிலாளர் சட்ட பத்திரிகையின் ஆசிரியராகவும் செயலாற்றி வருகிறார்.

### சி. சுப்பிரமணியம்

(நீதி, கல்வி, சட்டம்)

சி. சுப்பிரமணியம் 1910-ம் ஆண்டில் கோயம்புத்தூர் மாவட்டத்தைச் சேர்ந்த பொள்ளாச்சி தாலுகாவில் விவசாயிகள் குடும்பத்தில் பிறந்தார். 1932-ம் ஆண்டில் வழக்கறிஞர் கல்விப் பட்டம் பெற்றபின்பு அறப்போர் இயக்கத்தில் சேர்ந்து ஒரு ஆண்டு சிறைத் தண்டனை அடைந்தார்.

1936-ம் ஆண்டில் கோயம்புத்தூரில் வழக்கறிஞர் தொழிலைத் தொடங்கினார். 1941-ம் ஆண்டில் தனிப்பட்டவர்கள் அறப்போரில் கலந்துகொண்டார்; இதையொட்டி 6 மாத காலம் சிறைத் தண்டனை விதிக்கப்பட்டார். 1942-ம் ஆண்டு விடுதலை இயக்கத்தில் பங்குகொண்டதற்காக 1943ல் காவலில் வைக்கப்பட்டார்.

1946-ம் ஆண்டில் அரசியல் நிர்ணய சபை உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். பின்பு பாராளுமன்ற உறுப்பினராக இருந்துவந்தார். 1952-ம் ஆண்டு சனவரி மாதத்தில் கோயம்புத்தூர் நகரத் தொகுதியிலிருந்து சென்னை சட்டசபைக்கு உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். சி. இராசகோபாலாச்சாரியின் அமைச்சரவையில் நிதி அமைச்சராகவும் கல்வி அமைச்சராகவும் பதவி வகித்தார். அதற்குப்பின்பு அமைக்கப்பட்ட காமராசர் அமைச்சரவையிலும் மேற்கண்ட பதவிகளைத் தொடர்ந்து வகித்துவந்தார். இவ்வாண்டு பொதுத் தேர்தலில் கோயம்புத்தூர் மாவட்டத்தைச் சேர்ந்த கோயில்பாளையம் தொகுதியிலிருந்து மாகாண சட்டசபைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

### எம். பக்தவத்சலம்

(போலீஸ், விவசாயம்)

எம். பக்தவத்சலம் 1897-ம் ஆண்டில் பிறந்தவர். 1927-ம் ஆண்டுவரை சென்னையில் வழக்கறிஞர் தொழில் நடத்திவந்தார். தேசிய இயக்கத்தில் பங்கு கொள்வதற்காக வழக்கறிஞர் தொழிலைக் கைவிட்டார். பல ஆண்டுகளாகத் தமிழ்நாடு காங்கிரசுக் குழுத் துணைத் தலைவராக இருந்திருக்கிறார். செங்கல்பட்டு மாவட்டக் கழகத் துணைத்தலைவராகவும், சென்னை நகரத் துணை மேயராகவும் இருந்திருக்கிறார். 1937-39 ஆண்டுகளில் சென்னை மாகாணத்தில் ஆட்சி நடத்திய முதலாவது காங்கிரசு அமைச்சரவையில் பாராளு மன்றச் செயலாளராகப் பதவி வகித்தார். 1946-ம் ஆண்டிலிருந்து சென்னை மாகாணத்தில் அமைக்கப்பட்ட எல்லா அமைச்சரவைகளிலும் அமைச்சராக இருந்திருக்கிறார். 1936-ம் ஆண்டிலிருந்து விவசாயம், தொழில், தொழிலாளர் நலன் ஆகிய துறைகளின் அமைச்சராக இருந்திருக்கிறார்.

1956-ம் ஆண்டில் செனிவாவில் நடைபெற்ற ஐ. நா. சர்வதேசத் தொழிலாளர் நலன் அமைப்புக் கூட்டத்திற்குச் சென்ற இந்தியப் பிரதிநிதிகள் குழுவிற்கு தலைமை தாங்கினார். இவ்வாண்டுப் பொதுத் தேர்தலில் சென்னை சட்டசபைக்குச் செங்கல்பட்டு மாவட்டத்தைச் சேர்ந்த திருப்பெரும்பூதூர்த் தொகுதியிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்டார்.

### லூர்து அம்மாள்

(ஸ்தலஸ்தாபனம்)

திருமதி லூர்து அம்மாள் சைமன் 1912-ம் ஆண்டில் பிறந்தார்; இந்த அம்மையார் கன்னியாகுமரி மாவட்டத்தைச் சேர்ந்தவர். முன்னாள் தென் திருவாங்கூரின் அரசியலில் அம்மையாரின் கணவராகிய சைமன், முன்னணி இடம் வகித்து வந்தார். திரு-கொச்சி சட்டசபைக்குச் சைமன் இருமுறை தேர்ந்தெடுக்கப்பட்டார். தமது கணவருடன் திருமதி லூர்து அம்மாள் ஈரானில் சுற்றுப்பயணம் செய்திருக்கிறார். சுற்றுப் பிரயாணத்தை முடித்துக்கொண்டு 1937-ல் தமது சொந்த மாவட்டத்திற்கு திருமதி லூர்து அம்மாள் திரும்பிவந்தார். ரோட்டரி இயக்கத்தில் பேரார்வம் காட்டி வருபவர்; கிறித்தவ மகளிர் சங்கத்தின் (ஒய். டபுள்யூ. சி. ஏ.) செயலாளராகவும் பணியாற்றியுள்ளார்.

### எம். ஏ. மாணிக்கவேலு

(ரேவின்யூ)

எம். ஏ. மாணிக்கவேலு வட ஆற்காடு மாவட்டத்தில் பிறந்தார். சென்னை கிறித்துவக் கல்லூரியிலும், சட்டக் கல்லூரியிலும் பயின்று பட்டம் பெற்று வழக்கறிஞர் ஆனார். காங்கிரசுக்காரராக அரசியல் வாழ்க்கையை தொடங்கினார். 1926-லிருந்து 1937 வரை சென்னை மேல்சபை உறுப்பினராயிருந்து வந்தார். டாக்டர் சுப்பராயன் ஆட்சியில் 1928-லிருந்து 1930 வரை பாராளுமன்றச் செயலாளராகப் பணியாற்றினார். 1929, 1930-ம் ஆண்டில் வடஆற்காடு மாவட்டக் கோயில் விவகாரக் குழுவின் தலைவராகப் பணியாற்றினார். சில காலம் வட ஆற்காடு மாவட்டக் கழக உறுப்பினராகவும் பணியாற்றியுள்ளார்.

1952-ல் போளூர் தொகுதியிலிருந்து காங்கிரசை எதிர்த்து காமன்வீல் கட்சியின் சார்பில் சென்னை சட்டசபைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டார். இராசகோபாலாச்சாரியின் அமைச்சரவையில் நிலவருமானத்துறை அமைச்சராக இடம் பெற்றார். பிறகு காமராசர் முதலமைச்சரான பிறகும், இதே பதவியில் தொடர்ந்து இருந்துவந்தார். வட ஆற்காடு மாவட்டத்தைச சேர்ந்த தாரிஞ்சாபுரம் தொகுதியிலிருந்து காங்கிரசுக் கட்சியின் சார்பில் சென்னை சட்டசபைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

### கக்கன்

(மராமத்து)

மதுரை மாவட்டத்தைச் சேர்ந்த தும்பைப்பட்டியில் அரிசன வகுப்பில் 1909 ஆண்டில் கக்கன் பிறந்தார். காங்கிரசு இயக்கத்தில் தீவிர பங்கு கொண்டவர். 1942-ம் இயக்கத்தில் பங்கு கொண்டதற்காகத் தண்டனையடைந்து, ஒன்றரை ஆண்டுக் காலம் சிறைவாசம் அனுபவித்தார்.

முதலில் தாலுகாக காங்கிரசுக் குழுச் செயலாளராகவும் பிறகு மதுரை மாவட்டக் காங்கிரசுக் குழுவின் பொருளாளராகவும் சேவை செய்தார். பின்னர் அரசியல் நிர்ணய சபை உறுப்பினரானார். அதன் பிறகு மேலூர் தனித் தொகுதியிலிருந்து மக்கள் சபைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டார். 1954 டிசம்பர் 29-ந் தேதியன்று தமிழ் நாடு காங்கிரசுக் குழுத் தலைவரானார். மேலூர் தனித் தொகுதியிலிருந்து இப்பொதுத் தேர்தல்களில் சென்னை சட்டசபைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

### வி. இராமையா

(மின்சார இலாகா)

வி. இராமையா 1920-ம் ஆண்டில் பிறந்தார். சென்னை லயோலா கல்லூரியில் பயின்று பி. ஏ. பட்டம் பெற்றார். இண்டர்மீடியட் வகுப்புவரை அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் படித்தார். 1942 ஆகஸ்டு இயக்கத்தில் பங்கு கொண்டதற்காக வெளியேற்றப்பட்டார். அதன் பிறகு சென்னை லயோலா கல்லூரியில் சேர்ந்து கல்வி பயின்றார். மாணவர் காங்கிரசு இயக்கத்தில் பங்குகொண்டார். அரசியல் நிர்ணய சபைக்கும், இடைக்கால பாராளுமன்றத்திலும் உறுப்பினராகப் பதவி வகித்தார். 1952-லிருந்து 1955 சூன் வரை புதுக்கோட்டை மாவட்டக் காங்கிரசுக் குழுத் தலைவராகப் பணியாற்றினார். சில காலம் அ. இ. கா. குழுவின் உறுப்பினராகவும் இருந்திருக்கிறார். பிறகு த. நா. காங்கிரசுச் செயலாளரானார்.

திருச்சி மாவட்டத்தைச் சேர்ந்த திருமயம் தொகுதியிலிருந்து சட்டசபைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

# தோழர்களின் வெற்றிக்கு மகிழ்ச்சி

## இனிப்புகள் வழங்கி கொண்டாடினர்

### சென்னை—மயிலை

7-3-57, அண்ணா அவர்கள் வெற்றியைப் பாராட்டுமுகத்தான் மயிலை திருவீதியம்மன் கோயில்தெரு இளைஞர்களால், தெருவிலுள்ள ஒவ்வொரு வீட்டிற்கும் — இளஞ்சிறார்களுக்கும் இனிப்புகள் வழங்கப்பட்டன.

### திருக்காட்டுப்பள்ளி

8-3-57 இரவு 7 மணிக்கு இவ்வூர் தி. மு. கழகத் தோழர்கள்—ஆதரவாளர்கள் சார்பில் அண்ணாவின் திருஉருவப் படத்தை மோட்டாரில் வைத்து அலங்கரிக்கரிப்பட்டு ஊர்வலமாக கொண்டுசெல்லப்பட்டது. இவ்வெற்றிவிழாவில் வாணவேடிக்கைகள் வெடிக்கப்பட்டும், கிளாரினெட் வாத்தியங்களால் இன்னிசை நடத்தியும் சிறப்பு செய்யப்பட்டதோடு இனிப்புகளும் வழங்கப்பப்பட்டன.

### குனியமுத்தூர்

வெற்றி பெற்றக் கழகத் தோழர்களைப் பாராட்டி, 31-3-57 காலை மேற்படியூர் கிளையின் சார்பில் தோழர் கி. இராமசாமியால் சிறார்களுக்கு இனிப்பு வழங்குதலும்—நீர்மோர் வழங்குதலும் நடைபெற்றது. மாலை 7-30மணிக்கு தோழர் எம். கருப்பண்ணன் கொடியேற்றிவைத்தும், வாணவேடிக்கைகள்—வெடிகள் முடிந்ததுடனும், வேடமிட்டவர்களின் வேடிக்கை நிகழ்ச்சிகளுடனும் சிறப்பான ஊர்வலமும் நடைபெற்றது.

### செம்போடை

31-3-57 மாலை 6 மணிக்கு மேற்படியூர் தி. மு. கழக ஆதரவாளர்களால் ஊர்வலம் நடத்தப்பட்டும், இரவு 8 மணிக்கு எம். இரத்தினசாமி டீ ஸ்டாலுக்கு எதிரில் தோழர் இரு. சுயம்புராசன் தலைமையில் பொதுக்கூட்டமும் நடைபெற்றது. தோழர்கள் பலர் வெற்றி பெற்றவர்கள் குறித்துப் பேசியபின் தோழர் இ. சு. முத்துசாமி நாட்டு வாழ்த்துப்பாடி, தோழர் சி. விஸ்வநாதனால் தின்பண்டங்கள் வழங்கப்பட்டது.

### மலேயா--அலோர் ஸ்டார் (கிட்டா)

திருவள்ளுவராண்டு பங்குனித் திங்கள் 11-ம் நாள், மாலை, 5 மணியளவில், மலேயா-அலோர் ஸ்டார் தமிழ் இளைஞர்களால் அண்ணா அவர்களின் வெற்றியை பாராட்டி ஓர் கூட்டம் நடைபெற்றது. தோழர் வீ. சு. வடிவேலு தலைமையில் நடைபெற்ற இக்கூட்டத்தில் தோழர்கள் மு. சங்கர், க. இரா. மாரிமுத்து, சி. கோவிந்தன், ல. தி. மாரியப்பா, நா. ப. திருவிடச் செல்வன், மு. முத்தையன் ஆகியோர் அண்ணா அவர்களைப் பாராட்டி பேசியபின், விழாவில் கலந்துகொண்ட குழந்தைகளுக்கு இனிப்பு வழங்கப்பட்டது.

### கோட்டாரக்குடி

கொட்டாரக்குடி தி. மு. கழகம் வெற்றிபெற்ற கழகத் தோழர்களுக்கு பாராட்டுதலை தெரிவித்துக் கொள்கிறது.

### ஆலந்துறை

13-4-57 காலை 8-30 மணிக்கு, வெற்றிபெற்ற கழகத் தோழர்களைப் பாராட்டுமுகத்தான், ஆலந்துறை தி. மு. கழகத்தின் சார்பில், கழக பணிமனையிலிருந்து தோழர் வி. முத்து தலைமையில் ஓர் ஊர்வலமும், கொடியேற்றி வைத்தும், பொதுமக்களுக்கும் குழந்தைகளுக்கும் இனிப்புகள் வழங்கியும் பாராட்டு தெரிவிக்கப்பட்டது.

### இலங்கை-புறக்கோட்டை

7—4—57ல், கொழும்பு புறக்கோட்டை தி. மு. க. சார்பில், கொழும்பு நாராயண குரு மண்டபத்தில் தோழர் எல். எம். எஸ். செய்யது முகம்மது தலைமையில் ஓர் கூட்டம் நடைபெற்றது. தோழர் சுப. அருணாசலம் வரவேற்புரைக்குப் பின், தோழர்கள் பி. எம். ஜலால், பெருமாள், இளவழகன், அன்புமலர், கிராண்பாஸ் தி. மு. க. செயலாளர் ஆர். ஆர். கே. டேலர் ஆகியோர் சொற்பொழிவாற்றினர். தோழர் ஏ. ரகுமான் வெற்றி பெற்ற தி. மு. கழகத் தோழர்களைப் பாராட்டியும், வெற்றிக்காக உழைத்த புரட்சிநடிகர் எம். ஜி. இராமச்சந்திரன் அவர்களைப் பாராட்டியும் வந்த தீர்மானங்களை வழிமொழிந்தார். பின் மருத்துவக் கல்லூரி மாணவர் தோழர் விசுவலிங்கம் தலைமையில் கம்பளைதாசன் நாடக மன்றத்தாரால் ஒரு தேநீர் விருந்து அளிக்கப்பட்டது; பல்வேறு மன்றங்கள்-கல்லூரிகளிலிருந்து பிரதிநிதிகள்-மாணவத் தோழர்கள் கலந்துகொண்டனர்.

# ஐ.நா. படை மீது குற்றச்சாட்டு

## இஸ்ரேலியப் பெண் படையினர் மயக்குகிறார்களாம்!

எகிப்துக்கும் — இஸ்ரேலுக்கும் ஏற்பட்டுள்ள தகராறு, புதிய கட்டத்தை அடைந்துள்ளதாம்.

ஐ. நா. படையில் உள்ள போர் வீரர்கள், இஸ்ரேலியப் பெண் படைகளிடம் மயங்கி உறவாடுகின்றனராம்.

எகிப்திய அதிகாரிகள் இவ்வாறு தனிப்பட்ட முறையில் குற்றம் சாட்டியுள்ளனர்.

இதுபற்றி ஐ. நா. படைத் தலைவரிடம் எகிப்திய அதிகாரிகள் முறையிட்டபோது, அவரும் இத்தகைய உறவைத் தடுத்து உத்தரவு பிறப்பித்துள்ளாராம்.

மேலும் இந்த சாகசச் செயல்கள் நீடிக்குமானால், எகிப்து அதிகாரபூர்வமாக கண்டனம் தெரிவிக்கும் என்றும் எச்சரித்துள்ளதாம்.

# ‘அலட்சியப் போக்குடன் நடந்துகொள்ள இனி ஆட்சியாளரை விடமாட்டோம்’

## ‘இந்தித் திணிப்பைத் தடுக்கும் திறமை இவர்களுக்கு அறவே இல்லையா?’

## ‘தமிழ் உணர்ச்சி அற்றவர்கள் என்று இவர்களை எண்ணுவதில் தவறேது?’

### தி. மு. க. எதிர்காலப் பணிகுறித்து பேராசிரியர் க. அன்பழகன் விளக்கம்

“இந்தித் திணிப்புக்கு நம்முடைய எதிர்ப்பை இதுவரையில் வெளியிலிருந்து காட்டினேம். ஆட்சியாளர் கேளாக் காதினராகவும்—பராமுகத்தினராகவும் இருந்துவிட்டனர். இப்பொழுது சட்டசபைக்குள் சென்றிருக்கிறேம்; இனிமேல், தமிழின் வளர்ச்சிக்கும்—தமிழர் வாழ்விற்கும் கேடு செய்யும் பிரச்சினைகளில், அமைச்சர்கள் முன்போல அலட்சியப் போக்குக் காட்ட முடியாது—காட்டவும் விடமாட்டோம்.

“சட்ட மன்றத்தில் நம்முடைய எதிர்ப்பை மதிக்கின்றர்களா என்று பார்ப்போம்; இல்லையெனில், மறுப்பாவது இருக்கின்றதா என்று கேட்போம்; ஏதும் சொல்லாது—எதையும் செய்யாது இருந்தால் அமைச்சர்கள் போக்கைக் கண்டிப்போம்,”

—என்று, பேராசிரியர் க. அன்பழகன் அவர்கள், மதுரை—மேலூர் தி. மு. கழகச் சார்பில் நடைபெற்ற பாராட்டுக் கூட்டத்தில் சொற்பொழிவாற்றுகையில் குறிப்பிட்டார்.

8—4—57 மாலை 6 மணியளவில் மதுரை—மேலூர் மந்தைத் திடலில் பேராசிரியர் க. அன்பழகன் அவர்களைப் பாராட்டி ஓர் பொதுக்கூட்டம் நடைபெற்றது.

பாராட்டுக் கூட்டத்தில் கலந்து கொண்ட தோழர் எ. வேலுசாமியும், தோழர் சமதர்மமும் தங்களுக்கு வாக்களித்த அத்தொகுதி வாக்காளர் பெருமக்களுக்கு நன்றி கூறிக்கொண்டு, பேராசிரியரைப் பாராட்டிப் பேசினர்.

பாராட்டுக்கு நன்றி தெரிவித்து சொற்பொழிவாற்றிய க. அன்பழகன் அவர்கள் மேலும் குறிப்பிட்டதாவது:—

“இந்தித் திணிப்புக்கு உள்ள எதிர்ப்பெல்லாம் அமைச்சர்களுக்குத் தெரியவில்லையோ, அல்லது, யாரும் தெரிவிக்கக் கூட இல்லையோ; அல்லது, தெரிந்திருந்தும் இந்தியைத் தடுக்க மனமும்—தடுக்கும் திறமும் இல்லையோ நாம் அறியோம்! ஆனால், இந்தித் திணிப்பு மட்டும் நின்றபாடில்லை.

“காங்கிரஸ் கட்சி செயற்குழு என்பதை ‘தமிழ் நாடு காங்கிரஸ் காரியக்கமிட்டி’ என்று சொல்லிக்கொள்வதை தவிர, தமிழ் நாட்டிற்கு அதிகார பூர்வமாக ‘தமிழ் நாடு’ என்று பெயரிடக்கூட மனமில்லாத - தமிழ் உணர்ச்சியற்றவர்களாக இருக்கும் இவர்கள், இந்தித் திணிப்பைப் பார்த்தும் பாராதவர்கள்போல் இருப்பார்கள் என்று எண்ணுவதில் தவறில்லை.

“துன்பத்திலாழ்த்தக் கூடிய சில தோல்விகள் கழகத்திற்கு ஏற்பட்டாலும், அத்தோல்விகள் எல்லாம், நம்மிடம் பணம் இல்லாததால் - பித்தலாட்டம் செய்ய - ஒழுங்கை மீற - கண்ணியத்தை இழக்க நமக்கு மனமில்லாததால் ஏற்பட்ட தோல்விகளே தவிர, கொள்கைக்கு ஏற்பட்ட தோல்விகள் அல்ல!

“தேர்தல் வரும் - போகும்; ஆனல் திராவிட முன்னேற்றக் கழகம் என்றும் இருக்கும். தேர்தலுக்காக முளைத்த தோன்றலல்ல, திராவிட முன்னேற்றக் கழகம்! ஆதலால், தேர்தல் முடிந்தாலும் அதன் பணி நின்றுவிடாது. எங்களில் வெற்றி பெற்றவர்களும் வெற்றிபெறத் தவறியவர்களும் என்றும் மக்களுடனேயே இருப்பார்கள்; இதுவரை செய்துவரும் தொண்டினை இனியும் தொடர்ந்து செய்வார்கள்.

“கழகம் தேர்தலில் போட்டியிட்டதால் அதற்கு ஏற்பட்டுள்ள புதுவளர்ச்சியையும் புதுப் பெருமையையும் காணப் பொறுதவர்கள்தான் அதன் வெற்றியைத் தூற்றித் திரிகின்றனர். ‘சிறுபிள்ளைகள் சேர்ந்து கட்டிய மணல் வீடுதான் திராவிட முன்னேற்றக் கழகம்’ என்று சொல்லியவர்களுக்கெல்லாம் பொதுமக்கள் தேர்தல் மூலம் நல்ல பதிலளித்துள்ளனர்.

பணம்—அதிகாரம்—பித்தலாட்டம்—பொய்—நடிப்பு இவையெல்லாவற்றையும் கொண்டு காங்கிரஸ் பெற்றுள்ள வாக்குகளில் மூன்றில் ஒரு பங்கை, சிரமம் ஏதுமின்றி—கொள்கை ஒன்றை முன்னிறுத்திப் பெற்றுள்ளது திராவிட முன்னேற்றக் கழகம்.

“காங்கிரசுக்கு, அடிப்படையிலேயே வேறுபாடு கொண்ட கொள்கையுடைய எதிர்க்கட்சியொன்று தமிழ் நாட்டில் காங்கிரசை எதிர்த்து இப்பொழுதுதான் இவ்வளவு பெருவாரியான வாக்குகளைப் பெற்றுள்ளது; அப்பெருமையை திராவிட முன்னேற்றக் கழகம் ஒன்றினால்தான் பெற முடிந்திருக்கின்றது”

என்ற விளக்கம் அளித்தும், நமக்கு கிடைத்துள்ள வாக்குகளின்படி வெற்றி பெற்றிருக்க வேண்டியவர்கள் எண்ணிக்கையையும் புள்ளி விவரங்களோடு தெளிவாக்கினர்.

செயலாளர் தோழர் ப. தங்கவேல் நன்றிகூறி கூட்டம் முடிவுற்றது.

கூட்டத்தில் மாவட்டச் செயலாளர் தோழர் எஸ். முத்து அவர்களும், தோழர் சே. எஸ். சந்தானமும் கலந்து கொண்டனர். (ந. நி.)

### பாராட்டுக் கூட்டம்

18—4—57 மாலை 6-மணிக்கு சென்னை-தேனாம்பேட்டை எரிக்கரை கோழிப்பண்ணை எதிரில், திரு. வி. க. நூல் நிலையத்தின் சார்பில், தோழர் எ. வி. பி. ஆசைத்தம்பி அவர்களைப் பாராட்டி, தோழர் என். ஆர். பழனிசாமி தலைமையில் ஓர் பொதுக்கூட்டம் நடைபெறும். தோழர்கள் பி. பாலசுப்பிரமணியம், பி. ஆர். கோகுலகிருஷ்ணன், எ. எஸ். ஜெகபாதம், சே. மு. நாதர் ஆகியோர் பேசுவர். தோழர் எ. வி. பி. ஆசைத்தம்பி பாராட்டுக்கு நன்றியுரை வழங்குவார்.

### சென்னை—வண்ணை (4-வது வட்டம்) தி. மு. க. நிர்வாகிகட்கு:

16—4—57 இரவு 8-மணிக்கு, மேற்படி வட்ட தி. மு. கழக நிர்வாகிகள் கூட்டம் கழக நிலயத்தில் நடைபெறும். நிர்வாகிகள் அனைவரும் கலந்துகொள்ளுமாறு கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்.

### எம். ஜி. ராமச்சந்திரன் அறிவிப்பு

முடிவடையும் நிலையிலுள்ள படப்பிடிப்புகளிலும், நான் பொறுப்பேற்றுக் கொண்டுள்ள முக்கிய பணிகளிலும், ஓய்வின்றி முழு நேரமும் ஈடுபட வேண்டியிருப்பதால், எனது மறு அறிவிப்புவரை, சென்னையிலும், வெளியூர்களிலும், நாடகங்கட்கோ, இதர பொது நிகழ்ச்சிகட்கோ நண்பர்கள் கருணை கூர்ந்து, என்னை அழைக்காமல் இருக்கும்படி கேட்டுக் கோள்கிறேன்.

மேலும் இதுசம்பந்தமாக வரும் அழைப்புகளைக் கண்டிப்பாக ஏற்றுக்கோள்ள இயலாது என்பதை மீண்டும் தெரிவித்துக் கோள்கிறேன்.

அன்பன்
எம். ஜி. இராமச்சந்திரன்

### சி. பி. சிற்றரசு

சுற்றுப்பயணம்

எப். 17: சென்னை—சிந்தாதிரிப்பேட்டை
21: சென்னை — பெரியமேட்டு:
காலை — திருமணம்;
மாலை — பொதுக் கூட்டம்
22: சென்னை — புளியந்தோப்பு
25: சென்னை—வண்ணாரப்பேட்டை
27: மணப்பாறை
29: கருத்தம்பட்டி
30: தேவாரப்பன்பட்டி

### ஏப்ரல் 29!

#### சென்னை சட்டசபை கூடுகிறது

சென்னை, எப். 16—

மாநிலங்களின் சபை உப-தேர்தல்களுக்குப் போட்டியில்லாததால், பதிநாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்கள் அடங்கிய சென்னை சட்டசபை ஏப்ரல் 26-ந் தேதிக்குப் பதிலாக, எப். 29-ந் தேதி காலை 11 மணிக்கு முதன் முதலாகக் கூடுகிறது.

அன்று, புதிய உறுப்பினர்கள் பதவிப் பிரமாணம் எடுத்துக் கொள்வர்.

எப். 30-ந் தேதியன்று சட்டசபைத் தலைவர், துணைத் தலைவர் தேர்தல்கள் நடைபெறும்.

மே 1-ந் தேதியன்று, சட்டசபை, மேல்சபை உறுப்பினர்கள் அடங்கிய கூட்டுக் கூட்டத்தில் கவர்னர் உரையாற்றுவார்.

கவர்னர் உரைமீது சுமார் மூன்று நாட்கள் சட்டசபையில் விவாதம் நடைபெறுமென்றும், விவாதம் நடைபெறவேண்டிய காலத்தை சட்டசபை நடவடிக்கைக் குழு ஆலோசித்து நிர்ணயிக்குமென்றும் தெரியவருகிறது.

சட்டசபையின் முதற்கூட்டம் மே 7-ந் தேதியுடன் முடிவடையும் என்றும் எதிர்பார்க்கப்படுகிறது.

## ‘அன்று சமுதாயம் சீர்திருந்த வேண்டும் என்றேம்— வீசப்பட்ட சொல்லம்புகளைத் தாங்கிக் கொண்டோம்’

### ‘இன்று சட்டத்தைக் குறைகூருத மனப்போக்கு கண்டு மகிழ்கிறேம்’

### இராமச்சந்திரன் முழக்கம்

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

“உதாரணமாக, தபால் துறைகள் எல்லாவற்றிலும் இந்தியைப் புகுத்திவிட்டார்கள். தமிழ் நாட்டில் தபால் அட்டைகளில்—உறைகளில் தமிழுக்குப் பதிலாக இந்தியைத்தானே போட்டிருக்கிறார்கள்? தபால் ஊழியர்கள் தன் தாயை ஒதுக்கி வைத்து விட்டு வேறொரு தாயை தூக்கிச் செல்வதைப்போல, தாய் மொழியில் அச்சடித்த அஞ்சல்களை எடுத்துச் செல்வதற்குப் பதிலாக இந்தியில் அச்சடிக்கப்பட்ட அஞ்சல்களை எடுத்துச் செல்கிறார்கள்.

#### சிந்தியுங்கள்!

“அஞ்சல் துறையில் இந்தியை நுழைத்துப் பார்த்துவிட்டு, இப்பொழுது மக்களின் மூலாதாரமாக உள்ள பொருளாகிய காசுகளிலும் இந்தியைப் புகுத்திவிட்டார்கள்—‘நயா பைசா’ என்று அழைக்கச் சொல்லி! இப்பொழுது நாட்டில் 100-க்கு 18 பேர்கள்தான் படித்தவர்களாக - ஓரளவு கல்வியறிவு உள்ளவர்களாக இருக்கிறார்கள் என்று அரசாங்கத்தாரே கூறுகிறார்கள். இந்நிலையில் இந்தி வேண்டுமா? மக்கள் சிந்தித்துப் பார்க்கவேண்டும்.”

★

மேலும், எம். ஜி. ஆர். அவர்கள் தி. மு. கழகத்தின் கொள்கைகளையும்—கழகம் ஆற்றிய பணியையும் விளக்குகையில் குறிப்பிட்டதாவது:—

“திராவிட முன்னேற்றக் கழகம் பெண்களுக்குக் கற்பே கூடாது என்று சொல்லுகிறது’ என்று பிரச்சாரம் செய்கிறார்கள்; கற்பு என்றால் என்ன பொருள்? ஒரு பெண், தான் மணம் செய்து கொண்ட கணவனோடு, வாழ்நாள் முழுவதும் நெறிதவறுமல் வாழ்வதுதானே கற்பு? அதை வேண்டாம் என்ரு சொல்லுகிறது தி. மு. கழகம்? ‘நாட்டில், பெண்கள் இளம் வயதிலேயே விதவையாகிவிட்டால் அவர்களுக்கு மறுமணம் செய்துவைக்க வேண்டும்; நாட்டில் பொருந்தாமணம் செய்விக்கப்பட்ட பெண்களுக்கு விவாக ரத்து செய்துகொள்ள உரிமை வேண்டும்’ என்று சொன்னல், கற்பு என்பது கிடையாது என்று சொல்வதாகவா அர்த்தம்?

“ஆனல் இப்பொழுது அரசியல் சட்டத்திலேயே வந்து விட்டது— சட்டப்படி விவாக ரத்து செய்துகொள்ளலாம்’ என்று! நம்மைக் குறை கூறுபவர்கள், அந்தச் சட்டத்தைக் குறைகூறவில்லை.

“இவ்வளவு நாட்களாகப் பாடுபட்டோம்—‘நமது சமுதாயத்தில் சாதிப் பிரிவினைகள் ஒழிய கலப்பு மணம் செய்துகொள்ள வேண்டும்; ஒன்றே குலம்; ஒருவனே தேவன் — என்ற கடவுள் கொள்கையை மக்கள் கடைப்பிடிக்க வேண்டும்’— என்று!

“இன்று அரசாங்கமே கலப்பு மணம் செய்துகொள்வோருக்கு ரூ. 500 அளிக்க முன்வந்திருக்கிறது; அவர்களுக்கு அரசியல் சட்டத்தில் பாதுகாப்பு அளிக்கப்படுகிறது. நாம் இவையெல்லாம் வேண்டும் என்று முன்பு சொன்னபோது, நம்மை அவமானப்படுத்தினர்கள்; நம்மீது ஏச்சுப் பேச்சுக்களை மொழிந்தார்கள்; இழிமொழிகளை வீசினர்கள். நாம் அவைகளையெல்லாம் நம்முடைய நல்ல எண்ணத்திற்காக—கொள்கைக்காக—சமுதாயம் திருந்த வேண்டுமென்பதற்காக தாங்கிக்கொண்டோம். அது இன்று சட்டப்படி வருவதைக்கண்டு மகிழ்ச்சியடைகிறேம்.

“கலைஞர்களைப் பொறுத்தவரையில், என்னைப் போன்ற தி. மு. கழகத்தில் பங்கு பெற்றவர்கள், எங்கெல்லாம் நாட்டுப் பற்றும்—மொழிப் பற்றும் ஏற்படபாடுபடவேண்டுமோ, அங்கெல்லாம் பாடுபட முன்வருவோம். மற்றும், எல்லாக் கலைஞர்களுக்கும் நாட்டுப் பற்றும் மொழிப் பற்றும் ஏற்பட பாடுபடுவோம்.”

திராவிட முன்னேற்றக் கழகத்துக்காக தோழர் இரா. நெடுஞ்செழியன் எம்.எ., அவர்களால் அழகிரி அச்சகத்தில் அச்சிடப்பெற்று, (24. சூரியநாராயண செட்டித் தெரு, இராயபுரம், சென்னை) வெளியிடப்பெறுகிறது. ஆசிரியர்: இரா. நெடுஞ்செழியன் எம்.எ

